# எண்பத்து மூன்றில் தமிழ்

## பகுதி - 3




பதிப்பாசிரியர்:

டாக்டர் அன்னி தாமசு

# எண்பத்து மூன்றில் தமிழ்

பகுதி - 3

பதிப்பாசிரியர்

**டாக்டர் அன்னி தாமசு**

இணைப்பேராசிரியர்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை -113.

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title | : | **Enpattu munril Tamil-Part-III** |
| Editor | : | **DR. ANNIE THOMAS**<br>Associate Professor<br>International Institute of Tamil Studies, Chennai - 113. |
| Publisher and copy right | : | International Institute of Tamil Studies, ChennaI - 113. |
| Publication No. | : | 279 |
| Date of Publication | : | 1998 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Paper used | : | 16 kg. white Printing paper |
| Size of the book | : | Demy 1/8 |
| Price | : | Rs. 30/- |
| No. of pages | : | 132 |
| No. of copies | : | 1000 |
| Printers | : | Sri Vignesh Printers, Chennai - 33. |
| Subject | : | Tamil in 1983 - Part III |

# <u>அணிந்துரை</u>

"படுப்பினும் படாது, தீயர்
பன்னாளும் முன்னேற் றத்தைத்
தடுப்பினும், தமிழர் தங்கள்
தலைமுறை தலைமுறைவந்
தடுக்கின்ற தமிழே!"

என்பது பாவேந்தர் பாரதிதாசனின் தமிழின் சிறப்புக் குறித்த எண்ணம்.

தமிழ் மொழி வளர்ந்து வரும் வரலாற்றை 'ஆண்டுகளில் தமிழ்' என்ற திட்டம் வழியாகவும் வெளிக்கொணர வேண்டும் என்ற அவா காரணமாக நிறுவனம் நூல்களை வெளியிட விரும்பியது. இத்திட்டத்தின் வெற்றியாக வெளிவந்தவை 'எண்பதில் தமிழ்', 'எண்பத்தொன்றில் தமிழ்', 'எண்பத்திரண்டில் தமிழ்', 'எண்பத்து மூன்றில் தமிழ்' - இரண்டு தொகுதிகள். தொடர்ந்து 'எண்பத்து மூன்றில் தமிழ் - மூன்றாம் தொகுதி' இப்போது வெளிவருகிறது.

'எண்பத்து மூன்றில் தமிழ்' முதல் தொகுதியில் 10 கட்டுரைகளும், இரண்டாம் தொகுதியில் 11 கட்டுரைகளும் இடம் பெற்றன. இவை 1983-ஆம் ஆண்டு வெளிவந்த தமிழ் நூல்கள், ஆய்வாளர் பெருமக்களால் தனித்தனித் தலைப்புகளில் தொகுக்கப்பட்டு ஆய்வு செய்யப்பட்ட கட்டுரைகளாக அமைந்தவை.

மூன்றாம் தொகுதி நூற்றொகை. இதனைத் தொகுத்த திருமதி. டி.என். ஷீலா, 83-இல், 1136 நூல்கள் அச்சேறியதாகவும், இவை முந்தைய ஆண்டுகளில் வெளிவந்த நூல்களைக் காட்டிலும் மிகுதி என்றும் கூறுகிறார். எனவே இத்தொகுப்புகள் தமிழின் வளர்ச்சி பற்றியும், குறிப்பிட்ட ஆண்டில் வெளிவந்த பல்வேறு துறைகள் சார்ந்த தமிழ் நூல்கள் பற்றியும் ஆய்வாளர்களும், அறிஞர்களும் சிறப்பாகப் புரிந்துகொள்ள ஏதுவானதாக அமையும் நிலையில் மிக்க பயனுடையன என்பதில் ஐயமில்லை.

இந்நூலின் பதிப்பாசிரியர் முனைவர் அன்னி தாமசு அவர்கள் மதிப்பீட்டுக் குழுவின் கருத்துதலுக்கு ஏற்ப படிப்போர் பயன்பெறும் வகையில் ஒரு விரிவான முன்னுரையையும் எழுதியுள்ளார்.

'எண்பத்து மூன்றில் தமிழ்' நூலுக்கு 'நூற்றொகை' தயாரித்த திருமதி. டி. என். ஷீலா அவர்களையும், பதிப்பித்த முனைவர் அன்னி தாமசு அவர்களையும் பாராட்டுகிறேன்.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி - பண்பாட்டுத் துறை மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி - பண்பாட்டுத் துறைச் செயலாளர் அவர்களுக்கும், எங்கள் இதயங்கனிந்த நன்றி. நல்ல முறையில் அச்சிட்டுத் தந்த ஸ்ரீவிக்னேஷ் அச்சகத்தார்க்கும் எங்கள் நன்றி.

இயக்குநர்

# முன்னுரை

அன்னிமிருதுலகுமாரி தாமசு

## நூற்றொகை

நூல், தொகை ஆகிய இரு சொற்களும் தொல்காப்பியப் பழமையுடையன (தொல்-பொருள் 644-643). எனினும் அவற்றின் சேர்க்கையின் ஒருசொன்னீர்மைத்தான நூற்றொகை எனும் சொல் ஆட்சிக்கு வந்தது அண்மைக் காலத்தில் தான். மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை நூற்றொகை விளக்கம் (1888) என்ற நூல்தலைப்பில் இதன் முதலாளுகையைத் தந்தார். பிப்ளியாகிரபி (Bibliography) என்ற பொருண்மையில் உருவான ஆக்கச் சொல்லாகிய இந் நூற்றொகை, 'தமிழ் நாட்டுக் குழந்தை நூற்றொகை' (1965), 'தமிழ் நாட்டு நூற்றொகை' (1969) என அச் சொற்பொரு ளாட்சியை நிலைப்படுத்துகின்றது.

## சொல் - விளக்கம்

பிப்ளியாகிரபி எனும் சொல், கிரேக்கமொழி அடிச்சொற் களான பிப்ளியன் கிராபின் என்பனவற்றிலிருந்து உருவாகி யது; பிப்ளியன் என்றால் நூல் எனவும் கிராபின் என்றால் எழுதுதல், குறித்தல் எனவும் பொருள்பட்டு, நூல்பற்றிய எழுத்து (writing of books) என்பதைக் குறிப்பிட்டு நின்றது. பிப்ளியாகிரபிஸ் பாரிசியானா (Bibliographies Parisiana, 1645-50) என்பதில் முதன்முதல் இச்சொல் லூயிஜேகப் (Louis Jacob de Saint Charles) என்பவரால் பயன்படுத்தப்பட்டது.

அச்சு வெளியீடுகள் பற்றிய முறையான, அறிவியல் சார்ந்த, கலை நுணுக்கமான பதிவு என நூற்றொகையை விளக்கலாம். நூல்கள் பற்றிய பல்வகையான தகவல்களை நிர்ணயித்து முறைப்படுத்தித் தருவதற்கான உத்திகளைப் பெற்றுள்ளதால் இது கலையாகக் கருதப்படுகிறது. கருத்துகளின் இருப்பிடம் என்ற நிலையிலே, நூல்/புத்தகம்

பற்றிய எல்லா வகையான உண்மைத் தரவுகளையும் அறிவுகளையும் தருகின்றமையால், நூற்றொகை அறிவியல் நோக்குடையதாக வெளிப்படுகின்றது. ஒத்த கூறுகளுடைய நூல்களின் முறையான பட்டியலாக அமைவதால் கலையாக்கப்படைப்பாகவும் இதனை விளங்கிக்கொள்ள முடியும்.

அச்சு நூல்களைப் போலவே, கையெழுத்துப்படிகள் ஓலைச் சுவடிகள் போன்றவற்றின் விவரங்களும் தொகையாக்கித் தரப்பட இயலும். இதன் விரிவில், தாள் - அச்சு - எழுதுதல் தொடர்பான எல்லா தகவல்களும் உட்படுவதும் உண்டு. மேலும், இசைத் தட்டு, ஒலி- ஒளி நாடா/பேழைகள் என்பன பற்றியும் தொகுப்புச் செய்திகள் இணைகின்றன.

### தகவல் கூறுகள்

நூற்றொகையில் இடம்பெற வேண்டிய, நூல் பற்றிய தகவல்கள், தரவுகள் பலவாக அமையலாம். நூலின் அகநிலை குறித்த தகவலும், புற அமைப்பு தொடர்பான செய்தியும் இதில் உட்படும்.

நூலின் பெயர் (தலைப்பு), நூலாசிரியர் பெயரும் பிறந்த ஆண்டும், நுவல் பொருள் என்பன அகநிலைத் தகவல்கள். நூலின் பெயருடன், துணைப்பெயர் (Sub-Title) இருப்பின் அதுவும் தரப்பெறலாம். நூலாசிரியர் புனைபெயரி லறியப்படின் அது தனியே குறிக்கப்பட வேண்டியதாகும். ஆசிரியராக அன்றி, மொழிபெயர்ப்பாளர், பதிப்பாசிரியர், தொகுப்பாசிரியர் போன்ற நிலையமையின் அதனைத் தெளிவுபடுத்தல் சாலும். பல ஆசிரியர், பதிப்பாசிரியர், பதிப்புக்குழு அமையின், அனைவரையும் நூல் சுட்டினா லும், நூற்றொகையில் முதலமைபவர் பெயருடன் 'முதலியோர்' (et al) என அமைத்தல் மரபாகும். சுருக்கம் இங்குக் கருதப்பெறுகின்றது. நூலாசிரியர் பிறந்த ஆண்டு நூலகப் பயன்பாட்டுக்கு இன்றியமையாத கூறாக அமையினும், பல ஆசிரியர் தம் நூலில் இதனைக் குறிக்காமை சிக்கலாகி, அக் கூறு விடுபாட்டை உருவாக்குகின்றது.

நுவல் பொருள் என்பதில், நூல் எந்தப் பொருண்மை வகையைச் சாரும் (Subject) என்பதும், என்ன உள்ளீடு (Content) உடையது என்பதும் அமையும். தொகுப்பு (Anthology), திரட்டு (Collection), அகராதி, திறனாய்வு போன்ற பெரும்பரப்பின் பொதுமை நிலையைச் சுட்டுவதுடன், சமுதாய நாவல், மொழிபெயர்ப்புக் கவிதை, கதைப்பாடல் என்பன போன்ற சிறப்புநிலைச் சுட்டும் முன்னதில் அமையும். பொருளாதாரம், சமயம், அரசியல் என உள்ளீடும் சுட்டப்பெறும் நிலையில் மட்டுமே, ஒரு நூலின் பெயரை மட்டும் பார்த்து அதைத் தவறாக இனங்காணும் போக்கு தவிர்க்கப்பட முடியும்.

சான்றாக, 'முள்ளும் மலர்ந்தது' என்ற தலைப்பை மட்டும் பார்க்கும் போது, நாவலா, சிறுகதையா, நாடகமா, வாழ்க்கை வரலாறா, கவிதையா, பயணநூலா ... என்று புரிந்து கொள்ள முடியாமல் போகலாம். அறிவொளி இயக்கம் அல்லது குழந்தைத் தொழிலாளர் பிரச்சினைத் தீர்வு அல்லது இளங்குற்றவாளிகள் பற்றிய உளவியல் நூல் என்பது உள்ளீடு குறிப்பிடப்பட்டாலே உடனடியாகப் புலப்பட முடியும். எனவே இத்தகு தகவல்கள் ஐயம் நீக்கித் தெளிவு வழங்கும் அடிப்படை கொள்கின்றன.

நூலின் புறநிலை என்பது நூலமைப்பு, அச்சு, வெளியீடு என்ற மூன்றுவகையாக விரியத் தக்கது. நூலின் அளவு, தாளின் தன்மை, பக்க எண்ணிக்கை, பதிப்பு எண், பதிப்பு ஆண்டு, மொழி - மூலமொழி/பெயர்ப்புமொழி, எழுத் தளவு (types), நூலின் அட்டை, கட்டுமானம் (binding), அட்டை ஓவியம்/ஓவியர், விலை, படிகளின் எண்ணிக்கை என்ற பல கூறுகளும் நூலமைப்பு என்பதில் உட்படும். அச்சகப் பெயரும் முகவரியும் அச்சு என்பதிலும்; வெளியீட்டாளர் பெயரும் முகவரியும், உரிமை (rights), வெளியீட்டு எண், கிடைக்குமிடம், விற்பனையுரிமை என்பன வெளியீடு என்பதிலும் அமையும்.

இத்தகைய எல்லாக் கூறுகளும் 'நூல்விவரம்' என்பதில் இன்றியமையாதன எனினும், நூல்குறிப்பு (bibliographical data) கூட பல வேளையும் இவையனைத்தையும் தருவ

தில்லை. யாருக்காக, என்ன நோக்கத்திற்காக நூல்வ்வரப பட்டியல்கள் தயாரிக்கப்படுகின்றன என்பது இத்தகவல்கள் மிகுதலை அல்லது குறைதலை நிர்ணயிக்கிறது. மேற்போக் கான தகவல்களே முதனிலையில் போதும் என்ற பொதுமைபற்றி, விற்பனையாளர், நூலகர் போன்றோரின் நூல் குறிப்புகளில், அவர்களுக்குத் தேவையான- இன்றியமையாத அடிப்படைத் தகவல் கூறுகள் மட்டுமே அமையும். தலைப்பு, ஆசிரியர், வகைமை, விலை என்பனவே விற்பனையாளருக்குப் போதுமானது. நூலகச் சூழலில், இவற்றுடன் வெளியீட்டாளர், ஆண்டு, பக்க எண்ணிக்கை என்பன ஓரளவு தேவையாகக் கருதப்படு கின்றன. மேலும் நூலகக்குறியெண், பொதுவாசகருக்கன்றி, நூலகக்கல்வி பெறுவோருக்கும், நூலகருக்குமே, நூலை உரிய இடத்தில் வைத்தல் (Stack) மீண்டும் எடுத்தல் (retrieval) என்பதற்கு மிக்க உதவியாகஇருப்பதால் நூலிலும், நூலாக அட்டைகளிலும் (library catalogue cards) இடம் பெறுகின்றன. நூற்றொகைகள் அல்லது பிறவகையான பட்டியல்களில் இவை பெரும்பாலும் இடம்பெறுவதில்லை. மேலும், பல மொழிகளுக்கும், பலவகையான பொருண்மைக் கும் உரிய பொதுப்பரப்பில் நூலகக்குறியெண்கள் அமைவ தால், முழுச்சொல் - தொடர்களைவிட எண்ணும் எழுத்தும் பல்வகையாக இணைந்தமைக்கப்பட்ட உலகளாவிய குறியீடுகள் பொருத்தமாகின்றன. பெரும்பான்மையான இலக்கிய மற்றும் பல்துறை ஆராய்ச்சியாளர்கள் நூல் தலைப்பு, ஆசிரியர், வெளியீடு, இடம், ஆண்டு ஆகிய வற்றையே பல போதும் தருகின்றனர்.

இதிலும் பல முறைகள் காணப்படுகின்றன. நூல்விவரங் களை நூற்றொகையாக அமைத்து அகரவரிசைப்படுத்தும் போது, தலைப்படிப்படையிலாக்குவதும், ஆசிரியர் பெயரடிப்படையில் தருவதுமாகிய இரு முறையும் உண்டு. பொருளடிப்படை என்ற பெரும்பகுப்புக்குள் இரு தனிநிலை யாக இவை அமைக்கப்படல் வாய்ப்பாகும். நூலக நூற்றொகைகள் இவ்வொழுங்கு முறையைப் பின்பற்றும்.

பெயரடிப்படை அகரவரிசையில், பெயர் தரும்போது, முழுப் பெயரையே அடிப்படையாக்கல், குடும்பப் பெயரை

(surname) முதலில் தருதல், முதலெழுத்து பட்டம் போன்றவற்றை இறுதியிலாக்கல் என்பது போன்ற பல முறைகள் காணப்படுவதுண்டு. மேலும் நூல் வெளியீட்டு ஆண்டை, இறுதியில் தராமல், நூலாசிரியர்பெயரை ஒட்டி, அடைப்புக்குறியுள் அமைத்துத் தருதல் உண்டு. ஒரே ஆசிரியரின் பலநூல்களைக் கால வரிசையில் இனங் காணலுக்கு இது உதவும். ஆசிரியர் அறியப்படாதவிடத்து அல்லது தொகுப்பு, பதிப்பு நூலாக அமையுமிடத்து அப்பதிப்பாளர் - தொகுப்பாளர் (பெயர்) இங்கு இடம் பெறுகின்றனர். இவ்வாறு, நோக்கம் எதுவோ, தேர்ந்து கொண்ட முறை எதுவோ, தேவை எதுவோ அவையே நூல்விவரங்கள் தரப்படுவதில் பல்வேறு வகைமைகள் காண ஏது அமைக்கின்றன.

நூற்றொகையை, நூல்தலைப்பினடிப்படையில் அகர வரிசைப்படுத்தி அமைப்பதாக இருந்தால், அப்பகுதி முடிந்தபின், தொடர்ந்து, ஆசிரியர் அகரவரிசையும் (Author Index), பொருண்மையடிப்படையில் பகுத்து அமைப்பதாக இருந்தால் குறுக்குப் பார்வைக்கு (Cross-reference) வாய்ப்பாக, தலைப்புக்கும் ஆசிரியர் பெயருக்கும் தனித்தனி அகரவரிசை இறுதியில் - பின்னிணைப்பாக அமைவதும் சிறப்பாகும். நூற்றொகையைச் சரியாகவும் நிறைவாகவும் நன்றாகவும் பயன்படுத்த, பயனீட்டாளர் நோக்கிலிருந்து பார்க்க, இவற்றின் இன்றியமையாமை விளங்கும். எந்தப் பதிப்பகம்/நிறுவனம்/அமைப்பு வெளியீட்டில் முன்னிற் கிறது என அறியவும், அதன் முழுமுகவரி நூற்றொகைக் குள்-நூல்விவரத்தில் குறிக்கப்படாநிலையில் தெரியவரவும், பதிப்பக அகரவரிசையும் அருகி இடம்பெறல் உண்டு.

### நோக்கமும் பயனும்

நூற்றொகையின் நோக்கமும் பயனும் (aims, functions) பலவாறாக அமையும். குறிப்பிட்ட நூல் அல்லது பொருண்மை பற்றிய தகவலைத் தேடும் ஒருவருக்கு அதைக் கண்டுபிடிக்கவும் அடையாளங்காணவும் நூற்றொகை உதவுகின்றது. தங்கள் விருப்பத் துறையில், தம் நாட்டிலும் அயல்நாட்டிலும் கூட இது வரை என்னென்ன ஆய்வுகள்,

நூல்கள் தோன்றி வளர்ச்சிகள் ஏற்பட்டுள்ளன என்ற அறிவுத் தேடலில் உறுதுணையாகின்றன. இதனால் குறிப்பிட்ட ஆய்வுத்திட்டத்தின் திறன் முன்னேற்றமடைய முடிகிறது. குறிப்பிட்ட பொருண்மையின் பரப்பும் பெருமையும் புரிய இயல்கிறது. ஏற்கெனவே இருப்பில் உள்ள அறிவை எவ்வாறு பயன்படுத்தலாம் பெருக்கலாம், கையாளலாம் என உணர முடிவதுடன், ஒரிடத்தில் ஒரு நாட்டில் உள்ளதனைப் பல நாடுகளுக்கும் தெரிவிக்கவும் இயலும்.

ஒரே துறையில் எழுகின்ற பல நூற்றொகைகள், ஒன்றை விட மற்றொன்று தகவல் எண்ணிக்கையிலும் தரத்திலும் (quantity and quality) சிறந்தும், மிகுந்தும், நாளதுவாகியும் (up to date) அமைய வாய்ப்புள்ளதால், புதிய புதிய நூற்றொகைகள் வரவேற்கத் தக்கனவே.

ஆசிரியர் பெயர், தலைப்பு, அச்சு, பதிப்பு போன்ற தகவல்களில் ஏற்படும் ஐயப்பாடுகளை ஒரு நல்ல நூற்றொகையில் சரிபார்க்க இயலும், விலக்க முடியும் என்பதால் ஆய்வாளார் நூற்றொகைகளை விரும்பிக் கையாள்கின்றனர்; உருவாக்கவும் செய்கின்றனர். இதுவே வெறும் நூற்றொகையாகவன்றி விளக்கமுடையதாக (annotated) அமையும் போது, பொருண்மை எவ்வாறு விரிவாகக் கையாளப்பட்டுள்ளது, இயல்கள் என்னென்ன, முதன்மைக் கருத்துகள் எவை, புதுமை உண்டா, நடை எவ்வாறுள்ளது, ஒப்பீட்டு நிலையில் இந்நூலின் தகுதி என்ன - என்பன போன்ற கருத்துகள் தெளியமுடியும். சாதாரண நூலக அட்டை விவரங்களுக்கு மேலாகப் பல தகவல்களை இத்தகைய நூற்றொகை தரஇயலும்.

ஒரு பொருள் அல்லது துறை பற்றிய முன்னறிவுத் தெளிவு நூற்றொகையால் கிடைப்பதால், ஒவ்வொரு நூலையும் எடுத்துப் புரட்டிப் பார்த்துப் படித்துத் தெரிந்துகொண்டு, தம் ஆய்வுக்குத் தேவையா இல்லையா என்ற முடிவுக்கு வரவேண்டிய காலவிரையம் தடுக்கப் படுகிறது, தவிர்க்கப்படுகிறது. எளிதில், எளிமையாக, குறைந்த உழைப்பு மற்றும் குறைந்த செலவில் (நேரம், பணம்) விவரங்கள் பெற வாய்ப்பாகின்றது.

நூலகங்கள் போன்றவற்றிற்கு, நூல்கள் வாங்குதலை நெறிப்படுத்தும் சிறப்புக் கருவியாக நூற்றொகைகள் பலபோதும் அமைகின்றன. ஏற்கெனவே பயன்பாட்டிலுள்ள நூற்றொகைகள் தகவல் தருவதுடன் நின்று விடாது, வாசகருக்கு, மேலும் புதிய நூற்றொகைகளைத் தயாரிக்கவும் தூண்டுகோலாகி உதவுகின்றன. ஒரு நூற்றொகையைப் புரட்டிப் பார்த்துக் கையாள்வதாலேயே இந்தத் தலைப்பிலுள்ள நூலைப்படிக்க வேண்டும், இன்ன ஆசிரியரின் படைப்பைத் தெரிந்துகொள்ள வேண்டும், இன்ன பொருண்மையை ஆழ்ந்து விளங்கிக்கொள்ள வேண்டும் என்ற ஆவலும் விருப்பமும் ஒரு சாதாரண வாசகருக்குக் கூட புதிதாக ஏற்படலாம்.

நூலக அட்டைகளாகவும், அச்சுநூல் வடிவிலும் அமையும் இத்தகு நூற்றொகைகள், இக்கால அறிவியல் வளர்ச்சியின் கணினி போன்ற கருவிகள் காரணமாக, அவற்றில் உள்ளீடு செய்யப்பெற்று, தகவல்தட்டுகளாக உருவாக்கம் பெறுகின்றன. இன்னும் விரைவாகவும், தெளிவாகவும் தகவல்கள் பெறப்படமுடிகின்றன. பயன்பாட்டாளருக்குக் கணினியில் புதியபதிவுகளைச் சேர்த்துத் தகவல்களை நாளதுவாக்கவும் முடிகிறது. நூற்றொகைகளுக்காக நூல்விற்பனையிடங்களையோ நூலகங்களையோ, தேடித் தொடர்புகொள்ளும் தேவையின்றி இன்டர்நெட் போன்றனவாயிலாக, உடனடி, இருந்த இடத்திலேயே நூல்தகவல்களைப் பெறமுடிகிறது.

**வரலாறு**

தொகைநூல்கள் (anthologies) சங்ககாலம் முதலே காணப்படுகின்றன; அவற்றைப் பற்றிய பெயர்த் தொகைகள், நினைவு கூர்தலுக்கு எளிதாக, தனிப்பாடலாகப் பின்பு ஏற்பட்டுள்ளன. முந்தைய சங்கங்களில் எழுந்து மறைந்த நூல்கள்பற்றிய பட்டியலை, இறையனார் களவியல் (கி.பி. 8- ஆம் நூ) தருகிறது. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, கீழ்க்கணக்குப் பற்றிய வெண்பாக்கள், நூற்றொகையின் ஒரு தொடக்ககால முன்னோடி நிலை காட்டுகின்றன. 17 - ஆம் நூற்றாண்டின் வீரசைவப் புலவரான சிவப்பிரகாசரின் 34 நூல்கள் ஒரு நீண்ட பாடலில் அமைக்கப்படுவது இந்

நிலையில் வகைமை காட்டி, ஆசிரியர் நூற்றொகை (author bibliography) என்பதை ஒருவாறு நினைவூட்டுகிறது. ஆனால் இவை யெல்லாம் சரியான-செவ்வையான நூலட்டவணை யாகவோ நூற்றொகையாகவோ உருவாகவில்லை என்பது உண்மை.

வடமொழியில், வேதகாலத்திலேயே அறியப்பட்ட அனுக்ரமாணிக (Anukramanika), இந்தியாவில், நூற்றொகை யின் முன்னோடி வடிவைக் கொண்டதாகக் குறிக்கப் படுகிறது. சூத்திரவடிவிலான இதன்பட்டியல்கள், செய்யுள் மற்றும் பாடல் எண்ணிக்கை, அவற்றிற்குரிய ரிஷிகளின் பெயரும் குடும்பப் பெயரும், பாடல்களின் யாப்புவடிவம் என்பனவற்றைத் தகவலாக்கித் தந்தன. சான்றாக, ஒரு அனுக்ரமாணிக, ரிக்வேதத்திலுள்ள செய்யுளெண்ணிக்கை, சொற்கள், அசைகள் ஆகியவற்றைச் சுட்டியது.

மேனாட்டில், கி.பி. 1494 -இல், ஏறத்தாழ ஆயிரம் சபை எழுத்தாளர் (Church writers), அவர் நூல் என்பன பற்றி ஜோகன்ஸ் திர்த்தீம் எனும் பாதிரியார் (Johannes Tritheim, Abbot of Sponheim) திரட்டிய, காலவரிசையிலமைந்த (Chronological order) Liber de Scriptruribus eulesiastics என்ற நூற்றொகை முன்னோடியாக அமைந்தது. 1545 இல், நூற்றொகையின் தந்தை எனப் புகழப்பட்ட கான்ராட் கெஸ்னர் (Conrad Gesner) இலத்தீன், கிரேக்கம், எபிரேயம் ஆகிய மொழியெழுத்தாளரனைவரின் படைப்புகளடங்கிய, உலகளாவிய நூற்றொகையைத் (Universal Bibliography) தயாரித்தார். பகுப்பு முறையில் (classified) அமைந்திருந்த இதன் ஈற்றில், பொருளகர நிரல் இணைக்கப்பட்டிருந்தது.

தமிழின், முறையான முதல் நூற்றொகையாக 1709 இல் சீகன்பால்க் உருவாக்கிய பட்டியலொன்று அ. தாமோதரன் அவர்களால் குறிக்கப்படுகிறது. ஜெர்மன் மொழியிலமைந் திருந்த இத்தொகை, தமிழ் கையெழுத்துப்படிகளுக்கு முதன்மையளித்திருந்தது. 1828- இல் மெக்கன்சியின் விளக்க அட்டவணை தோன்றி, இத் துறையில் முதன்மை பெற்றது. 19 -ஆம் நூற்றாண்டில் இத்துறை மேலும் வளர்ச்சி கண்டது. 1849 -இல் சைமன்காசிச் செட்டியின் தமிழ் மொழிநூற் பட்டியலும் 1853-இல் கே. கிராலின் தொகையும் 1865 இல்

ஜான் மர்டாக்கின் அச்சுநூல்விவரப்பட்டியும் வெளிவந்து இத்துறையின் முறையான வளமான தொடக்கமும் தொடர்ச்சியும் சுட்டின. 20 -ஆம் நூற்றாண்டுத் தொடக்கத் தில், 1909 - இல் ஜி.யு.போப், எல்.டி.பர்னெட் ஆகியோரால் பிரிட்டிஷ்மியூசியத் தமிழ் நூல்கள் பற்றிய அட்டவணை உருவாயிற்று. இவ்வாறு தொடக்கப் படைப்புகள் பெரும்பாலும் ஜெர்மன், ஆங்கிலம் போன்ற பிறமொழி யிலும், பிறமொழித் தமிழறிஞராலும் உருவான உண்மை குறிப்பிடத்தக்கது.

1912 - இல், சென்னை கீழ்த்திசைச் சுவடி நூலகத் தமிழ்ச் சுவடிகளின் அட்டவணை உருவாயிற்று. 1978 -இல் தமிழகராதிகள் பற்றிய நூற்றொகை (அ. தாமோதரன்) எழுந்தது. மொழிபெயர்ப்பு நூற்றொகை 1983 -இல் தோன்றியது (ச.சிவகாமி). இவ்வாறு புதியபுதிய வகைகள் உருவாகலாயின. இவை சுட்டத்தக்க புது முயற்சிகளாகவும் அமைந்தன.

தனிமனிதரும் நிறுவனங்களும் நூற்றொகையுருவாக்கத் திற்கு அடித்தளமமைத்தமை இவற்றிலிருந்து தெரிகிறது. எனினும் நூற்றொகைச் சங்கங்கள் (Bilbliographical Societies), உலக நூற்றொகைக் கழகம் (International Institute of Bibliography, Brussels, 1896) போன்றன இங்கு உருவாகவில்லை. உலகளாவிய தமிழ் நூற்றொகையோ, தமிழ்நூற்றொகைபற்றிய நூற்றொகையோ (Universal Tamil Bibliography, Bibliography of Tamil Bibliographies) இன்னும் உருவானதாகத் தெரியவில்லை. பல அமைப்புகள், பணி வெளியீடுகள் ஆகியவற்றின் ஒருங்கிணைப்பே இதன் நிறைவேற்றத்திற்குத் தளமமைக்கமுடியும்.

### பெயர்கள்

நூற்றொகைகள் தமிழில் பல பெயர்களில் அறியப்பட்டு வருகின்றன:

அ) அகரவரிசை : தமிழ் நாவல்கள் அகரவரிசை (1985)

ஆ) அகரவரிசைப் பட்டியல் : சரஸ்வதி மகால் தமிழ் அச்சுப் புத்தக அகர வரிசைப் பட்டியல் (1964)

| | | |
|---|---|---|
| இ) அகராதி | : | தமிழ் இலக்கிய அகராதி (1952) |
| ஈ) அட்டவணை | : | தமிழ் நூல் விவர அட்டவணை (1961 - 1972) |
| உ) அடங்கல் | : | சிலப்பதிகார ஆய்வடங்கல் (1973) |
| ஊ) அடைவு | : | தமிழ் நோக்கு நூல் அடைவு (1978) |
| எ) கலைக்களஞ்சியம் | : | டாக்டர் மு.வ. கலைக்களஞ்சியம் (1974) |
| ஏ) கோவை | : | பாரதியார் நூற்பெயர்க் கோவை (1982) |
| ஐ) தொகை | : | தமிழ்நாட்டுக் குழந்தை நூற்றொகை (1965) |
| ஒ) தொகை விளக்கம் | : | நூற்றொகை விளக்கம் (சுந்தரம்பிள்ளை,?) |
| ஓ) பட்டியல் | : | இந்திய தேசிய நூல்விவரப் பட்டியல் (1981) |
| ஔ) விளக்கம் | : | சாமிநாத ஐயர் நூல்நிலையச் சுவடிகளின் விளக்கம் (1962) |

இத்தகைய பெயர்ச் சுட்டுகள் எதுவுமின்றியும் நூற்றொகைகளமையலாம் என்பதை, 'கல்கத்தா தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிகள்' (1979) என்பது காட்டும்.

ஒன்று மற்றும் பல தொகுதிகளாக வரும் இத்தகு நிலை தவிர - முழுநூலாக அன்றி, நூற்பகுதியாக, ஆய்வேடுகளின் பின்னிணைப்பாக, இதழ்களின் பகுதியாக, கட்டுரைகளின் இணைப்பாகப் பலவகையான நூற்றொகைகள் அறியவருகின்றன. கையெழுத்துப்படியாகவும், உருட்டச்சு, தட்டச்சு நிலையிலும் கூட (memeograph) தனிநபரும் நூலகங்களும் நூற்றொகைகளைப் பேணுதல் தெரியவந்துள்ளது.

**வகைமை**

நூற்றொகைகளின் வகைப்பாடு பற்றிய பல்வேறான செய்திகள் தெரியமுடிகிறது. ஐவகையாகப் பகுக்கப்படல் முதனிலையாகும். அவை,

1. முறையான நூற்றொகை (Systematic or enumerative)
2. பகுப்புத் திறனாய்வு நூற்றொகை (Analytical and critical)
3. விளக்க நூற்றொகை (Descriptive)
4. பனுவல் நூற்றொகை (Textual)
5. வரலாற்று நூற்றொகை (Historical)

என்பன. இவை தவிர மேலும் பதின்மூன்று வகையாகக் கணித்துத்தருதலும் அமைகின்றது. அவை,

*1.* பொது நூற்றொகை (General) *2.* உலகளாவிய நூற்றொகை (Universal) *3.* தேசிய நூற்றொகை (National) *4.* மண்டல/பிராந்திய நூற்றொகை (Regional) *5.* பொருண்மை நூற்றொகை (Subject) *6.* கால நூற்றொகை (Period) *7.* வடிவ நூற்றொகை (Form) *8.* வணிக நூற்றொகை (Trade) *9.*நூற்றொகைகள் பற்றிய நூற்றொகை (Bibliography of Bibliographies) *10.* ஆசிரியர் நூற்றொகை (Author) *11.* அரிய, தொடக்க கால நூற்றொகை (Incunabula or Rare Book Bibligraphies) *12.* தேர்ந்தெடுத்த நூற்றொகை (Selective) *13.* ஆசிரியரறியாத மற்றும் புனைபெயரிலமைந்த நூற்றொகை (Anonymous and Pseudonymous works) என்பன.

இவையே வகைகள், வேறு இல்லை என முடிவு செய்ய இயலாது. ஆய்வேட்டு நூற்றொகை, நூலக நூற்றொகை, இதழ்கள் நூற்றொகை, இதழ்க் கட்டுரைகளின் நூற்றொகை, அரசு வெளியீடுகளின் நூற்றொகை, கைப்பிரதி நூற்றொகை (Pamphlets), உடன்கால நூற்றொகை (Current), முற்கால நூற்றொகை (retrospective), தனியார் நூற்றொகை (personal), ஒரு துறை நூற்றொகை, தொகுப்பு நூற்றொகை (Cumulative), நோக்கு நூற்றொகை (reference) என இன்னும்பல அமைதல் வாய்ப்பாகும். இவற்றுள் தனிப்பட்ட வகைகளும், ஒன்றோடொன்று அண்மியும், நெருங்கியும், மயங்கியும், துணைவகையாகியும் அமைவனவும் உண்டு.

**வளர்ச்சி**

தினந்தோறும் புதிய நூல்கள் தோன்றுவதால், நூற்றொகை என்றும் வளர்ந்து கொண்டேயிருக்கக் கூடியது. நாளதுவாக்கல் இன்றியமையாதது; ஒருநாளும் முற்றுப் புள்ளியுடன் நின்றுவிட முடியாதது, முழுமை அல்லது நிறைவு ஏற்படவியலாதது. இதற்குப்பலகாரணங்கள் அமைகின்றன.

பலநூல்கள் கிடைத்தற்கரியனவாக அமைவதால் நேரடியாகப் பார்த்துத் தகவல்கள் பெறமுடிவதில்லை. பல

நூல்கள் பற்றிக் குறைந்த தகவல்களே கிடைக்கின்றன. சிலவேளைகளில் தலைப்பு மட்டுமே கூட அறியப்படு வதுண்டு. சில நூல்களைப் பற்றி பல தகவல்கள் இருப்பினும் தேவைப்படுமிடத்து அவை மறுபார்வைக்குக் கிட்டுவ தில்லை. புதிய புதிய வரவுகள் காரணமாக, எண்ணிக்கைக்கு அடங்காத நூல்கள் நாடோறும் வந்து, பெருக்கம் காரணமாகத் தகவல்பெற -திரட்ட-பதிவு செய்ய நெருக்கடி உருவாக்குகின்றன. விடுபாடுகள் ஏராளமாகின்றன. மொழிகள் மிகப் பலவாக அமைவதாலும் அவ்வம் மொழி வெளியிட்டாளரும் வெளியிடுமிடங்களும் மிகப்பலவாக - பரவலாக உலகெங்கும் விரிந்து அமைவதாலும் அனைத்தை யும் ஓரிடத்தில் பெறவோ அணுகவோ வாய்ப்பமை வதில்லை. அனைத்தையும் தேடவும் தெரியவும் திரட்டவும் போதிய ஆர்வமோ உழைப்போ முயல்வோரோ கிடைப்பது மிக அருமை. கைப்படும் நூல்களைக்கூட எந்த முறையில் நூற்றொகைப்படுத்துவது என்பதில் அமையும் கருத்து வேறுபாடும் இடர்ப்பாடாக அமைகிறது. வெறும் அகரவரிசை என்பது எப்போதும் ஏற்புடையதாக அமைவதில்லை எனவும், பொருளடிப்படைப் பகுப்புக்கூட பல வேளைகளிலும் சிக்கல் உருவாக்குவது எனவும் அறிய முடிகிறது.

எல்லாவித இடையூறையும் சிக்கலையும் தவிர்த்து ஒரு உலகளாவிய நூற்றொகை உருவாக்குவது என்பது இயலாதகாரியம். குறைபாடுகள், விடுபாடுகள் இருக்கவே செய்யும். எனவே பலவகையான எல்லைகளை வகுத்துக் கொண்டு, வரையறுத்துக் கொண்டு நூற்றொகைகள் தயாரிக்கப் பெறுகின்றன. மொழி, பொருண்மை, இடம், ஆண்டு, அமைப்பு (நிறுவனம்) நோக்கம் போன்ற பல கூறுகள் எல்லை வகுப்புக்கு அடிப்படையாகலாம். இவ்வாறு உருவாகும் நூற்றொகைகள் தம்முள் ஓரளவு நிறைவும் முழுமையும் முதன்மையுமுடையனவாக அமைகின்றன. பல நிறுவனங்கள் நூற்றொகைகளை வெளியிடுவதைக் குறிக்கோளாகக் கொண்டு, தொடர்ந்து அதில் ஈடுபடுவது இத்துறைக்கு வளமையும் வளர்ச்சியு மாகும்.

**தமிழில் ...**

தமிழிலும், தமிழ்தொடர்பாகப் பிறமொழியிலும், தமிழகத்திலும் தமிழகத்திற்கு வெளியேயும் நூற்றொகைகள் பல வந்துள்ளன. சுவடிகள் பற்றிய நூற்றொகை (manuscript Bibliographies), அச்சு நூற்றொகை (printed book Bibliographies), கட்டுரைத் தொகை (article Bibliographies) ஆகிய மூன்று பெரும்பிரிவில் இவை அடங்கும்.

ஓலை மற்றும் தாள் சுவடி பற்றிய தொகைகள் குறிப்பிடத்தக்கன. A Descriptive Catalogue of Tamil Manuscripts in Mahamahopadhyaya Dr. V. Swaminathaiyar Library, Madras, 1956 - 1977 என ஆறு தொகுதிகளை உ.வே.சா. நூலகம் வெளியிட்டுள்ளது. ஒரு துறைச்சுவடி அட்டவணையாக, Siddha Medical Manuscripts (V.R. Madhavan, 1985) என்பதமையும். தஞ்சை சரசுவதிமகால், தமிழ்ப் பல்கலைக்கழகம், சென்னை கீழ்த்திசைச் சுவடி நூலகம், ஆசியவியல் நிறுவனம், கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகம் போன்ற பல அமைப்புகள் சுவடி நூற்றொகைகள் வெளியிட்டுள்ளன.

அச்சுநூற்றொகையுள், முன் சுட்டிய ஜான்மர்டாக்கின் தொகுப்பு சுட்டுதற்குறியது. முதற்பதிப்பில் 1865 ஆம் ஆண்டு வரையும் மறுபதிப்பில் 1900 ஆண்டுவரையிலுமான நூல்கள் பற்றிய குறிப்புகள் அடங்கும். தமிழ்நூல் விவர அட்டவணை 1910 வரையுள்ள நூல்கள் குறித்துத் தகவலளிக்கும் (2 தொகுதி, 7 பகுதி மற்றும் இணைப்பு, 1961 -72). பிரிட்டிஷ்மியூசிய நூலகத் தமிழ் அச்சு நூல்கள்பற்றிய அட்டவணை 1909 மற்றும் 1931 இல் வெளிவந்துள்ளன.

கட்டுரைகளின் அடைவு சிறிது அருகியே காணப்படுகிறது. Tamil Research Through Journals (A.A.Manavalan, 1975) முதன்மையாகச் சுட்டத்தக்கது. தமிழியல் (Jots) இதழின் 1 முதல் 22 தொகுதிகளின் கட்டுரைப் பட்டியல் 23 -ஆம் இதழில் (June 1983) இடம் பெறுகிறது. ஆய்வுக் கோவை நூற்றொகுதி (சு.சக்திவேல், 1978) பத்து ஆண்டுகளின் ஆய்வுக்கோவைக் கட்டுரைகளின் தொகை

யாக அமைகின்றது. செந்தமிழ் இதழின் கட்டுரைகளுக்கும் விளக்க அட்டவணை எழுந்துள்ளது (ப.ர.சுப்பிரமணியன், *1980*); உலகத்தமிழ் மாநாட்டுக் கட்டுரை அடைவும் அண்மையில் வந்துள்ளது (*1995*).

முன்பு சுட்டிய நூற்றொகை வகைகள் பலவற்றுக்கும் தமிழிலும் சான்று உண்டு. தேசிய நூற்றொகைக்கு, கல்கத்தா தேசிய நூலகம் *1958* முதல் வெளியிட்டுவரும் Indian National Bibliography என்பதில் தமிழுக்கமையும் பகுதியும், சாகித்திய அகாதெமியின் National Bibliography of Indian Literature என்பதில் தமிழுக்கமையும் பகுதியும் (*1974*, தொகுதி *4*, பக்.*34-229*) சான்றாக அமையும்.

மண்டல அல்லது பிராந்திய நூற்றொகைக்கு மேலே கண்ட தமிழ் நாட்டு நூற்றொகை, ராமசுப்பையாவின் Tamil Malaysiana - A check list of Tamil Books and Periodicals published in Malaysia and singapore (1969) என்பன எடுத்துக்காட்டாகும்.

ஆசிரியர் நூற்றொகை, Dr. Mu. Va's Works, Bibliography (Dr. Mu. Va, 1975) என்பதில் காணப்படுகிறது.

நபர் பற்றிய பொருண்மை நூற்றொகையாகக் கம்பன் ஆய்வடங்கல் (ச. சிவகாமி, *1978*), அகிலன் ஆய்வடங்கல் (சு.வெங்கடராமன், *1974*), ஜெயகாந்தன் ஆய்வடங்கல்(ப. அறிவழகன், *1978*) போன்றனவும்; இடம்பற்றிய பொருண்மை நூற்றொகையாக, Mamallapuram, an annotated Bibliography (N.S. Ramaswami, 1980) என்பதும்; இலக்கிய நூற்றொகையாக ந.சி. கந்தையாபிள்ளையின் தமிழ் இலக்கிய அகராதி (*1952*) என்பதும் அமைகின்றன.

இலக்கியவகை நூற்றொகையாகப் பல காணப்படு கின்றன. *1973* வரையுள்ள சிறுகதைகள் பற்றி 'இருபதில் சிறுகதை'யும் (பியூலாமெர்சி, *1974*), *1974* வரையுள்ள புதினம் குறித்து 'தமிழ் நாவல்கள் ஓர் அறிமுக'மும் (கோ.வெ. கீதா, *1979*), *1985* வரையுள்ள புதின நூற்றொகையாக 'தமிழ் நாவல்கள் அகர வரிசையும்' (வே. சீதாலட்சுமி, *1985*) அமைவதுடன், சதகம் (தமிழ்ச்

சதக இலக்கியம், ச.சிவகாமி, *1985*), தலபுராணம் (தமிழில் தலபுராணங்கள், பி. சுப்பிரமணியன், *1974*), நாடகம் (Tamil Drama, A.N. Perumal, 1981), பத்தாண்டுத்தமிழ்க் கவிதை (பத்தாண்டுத் தமிழ்க் கவிதைகள் (*1967-1976*), மு.தமிழ்க்குடிமகன், *1986*), பயண நூல் (தமிழில் பயண இலக்கியம், ஞான புஷ்பம், பிஎச்டி ஆய்வேடு - *1984*), வாழ்க்கை வரலாறு (தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம், ச. சிவகாமி, *1985*) என்று பிற பலவும் உருவாகியுள்ளன.

முறைப்படுத்திய நூற்றொகை வகையான ஆய்வேட்டு நூற்றொகை (Dissertation Bibliography) Bibliography of Dissertaions on Tamilology (T. Murugarathanam, JOTS, 1969), Dissertations on Tamilology (Annie Thomas, 1977), தமிழியல் ஆய்வு (தமிழண்ணல், *1983*) என வந்துள்ளன.

பருவ நூற்றொகைகள், கல்கத்தா தேசிய நூலகமும், சென்னை கன்னிமாரா நூலகமும் வெளியிடுவன ஆண்டு தோறும் திரட்டபெற்றும் (Cumulative) வருகின்றன. உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் 'ஆண்டுகளில் தமிழ்' என்ற பார்வையில் *1980,1981,1982* ஆகிய ஆண்டுகளில் வெளிவந்த தமிழ் நூல்களின் பட்டியலை வெளியிட்டுள் ளது; தற்போது *1983*-இன் தமிழ் நூற்றொகை நூலகப் பகுப்பு முறைப்படித் தொகுக்கப்பெற்று இணைக்கப் பெற்றுள்ளது.

இவ் ஆண்டுகளில் தமிழ்த் தொகுதியின் பிற கட்டுரைகள் பலவும், தம் இணைப்பாகப் பல்வேறு நூற்றொகைகளைத் தருவது சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. அச்சு நூல்கள் தவிரபல்வேறு இதழ்களின் - நாளேடு, வார இதழ், மாத இதழ், சிறுபத்திரிகை, மருத்துவ இதழ், சோதிட இதழ், பட்டியலும் இதில் உட்படும்.

வரையறுத்த நூற்றொகைகளாக, A reference guide to Tamil Studies: Books (Xavier S. Thaninayagam, (1966), தமிழ் கலை நூற் கோவை (பி. அர்த்த நாரீசுவரன், *1980*), மறைந்து போன தமிழ் நூல்கள் (மயிலை சீனி. வேங்கட சாமி), ஏற்கெனவே சுட்டிய Bibliography on Translations, Tamil Dictionaries: A Bibliography போன்ற பலவும் அமைகின்றன.

## தொகுப்புரை

மிகப்பலவாகத் தமிழில் நூற்றொகைகள் அமைகின்ற போதும், இன்னும் அவை வளர்ந்து முழுமையுற வேண்டும். தமிழகத்தில் மட்டுமன்றி தமிழ் வழங்கும் பல பகுதியிலும் வெளியாகும் நூல்களும் தொகைகளில் பதிவு பெறவேண் டும். எல்லா தமிழ் நூல்களையும் ஒருங்கு காண ஓரிடம் வகுக்கப்படல் தேவை. ஆராய்ச்சிக் கட்டுரைகள், ஆய் வேடுகள், நூல்கள் ஆகியவற்றின் பகுதியாகவும் பின்னிணைப் பாகவும் அமையும் நூற்றொகைத் தரவுகளனைத்தும் தொகுத்துத் திரட்டப்படுதல் இன்றியமையாதது. முழுமை யான தமிழ் நூற்றொகையுடன், தமிழ் நூற்றொகைகள் பற்றிய நூற்றொகையும் உடனடியாகத் தயாரிக்க வேண்டி யனவாம்.

### பார்வை நூல்கள் (References)


Bibliographical Activities in Tamil, S.V. Subramanian, JOTS 37, June 1990, pp 64-80

Bibliography, Girija Kumar, Krishan Kumar, Vikas Publishing House, New Delhi, 1976

Cassells Encyclopaedia of world Literature, S.H. Stein Berg. Cassell & Company, London, 1973, Vol. 1, p. 66

Encyclopedia Americana, Americana Corporation, New York, 1970, Vol 3, pp. 721 -724

Encyclopedia Britannica, William benton (Ed)., Chicago, 1972, vol 3, pp. 588-592

Fundamentals of Biblography, Jagadish Saran Sharma, S.Chand & Company, New Delhi, 1977.

Tamil Dictionaries: A Bibliography, A. Dhamotharan, Franz Steiner Verlag, Wesbaden, 1978

# நூற்றொகை

-டி.என்.ஷீலா

எண்பத்துமூன்றில் 1136 நூல்கள் அச்சேறியுள் ளன. இவ்வெண்ணிக்கை, முந்தைய ஆண்டுகளை விடக் கூடுதலாக அமைவது குறிப்பிடத் தக்கது. 1980 -இல் 850 நூல்களும் 1981 -இல் 1120 நூல்களும், 1982 -இல் 660 நூல்களும் அச்சொளி கண்டுள்ளன என்பதை நிறுவனம் வெளியிட்ட 'ஆண்டுகளில் தமிழ்' நூல்கள் உணர்த்துகின் றன.

தமிழ்நூல்கள் வெளியீட்டில், *1983* ஆம் ஆண்டைப் பொன்னெழுத்துக்களில் பொறிக்கலாம். முந்தைய ஆண்டுகளைவிடக் கூடுதலாக நூல்கள் வெளிவந்துள்ளன. மொத்தம் *1136* நூல்கள் அச்சேறியுளளன். அவை நூலாக முறைப்படி உரிய குறியீட்டெண்களுடன் இங்குப் பட்டியலாகத் தரப்படுகின்றன.

நூற்றொகை, அகராதி, இதழ், இலக்கிய வரலாறு, அறிவியலின் பல துறைகள், மருத்துவம், சோதிடம், கலை, இலக்கியம், இலக்கிய ஆய்வுகள், மொழிபெயர்ப்பு நூல்கள், இலக்கணம், சமயம், தத்துவம், உளவியல், கல்வி, பயணம், வரலாறு, அரசியல், பொருளியல், மானிடவியல், சட்டம், வாழ்க்கை வரலாறு எனப் பல துறையினவாக இவை அமைகின்றன.

இந்நூற்றொகையைத் தொடர்ந்து ஆசிரியர் அகர வரிசையும், பதிப்பக அகரவரிசையும் தரப்படுகின்றன.

படைப்பிலக்கியமும், அவற்றைச் சார்ந்த ஆய்வு நூல்களும் மிகுதியாக வெளிவந்துள்ளமை சுட்டுதற்குறியது. அறிவியலின் காலவளர்ச்சி, மற்றும் அறிவியலறிவுப்

பரப்பின் தேவை காரணமாக அத்துறைகளில் நூல்பல வந்துள்ளமை குறிப்பிடத் தக்கது.

புதிய படைப்பாளரும், புதிய பதிப்பகங்களும் தங்கள் பணியை இணைத்து, தமிழ் நூல் வெளியீட்டிற்குச் சிறப்புச் செய்துள்ளனர்.

இந்நூற்றொகைப் பகுப்பு, கீழ் வருமாறு அமைகிறது.

a. பொது
அட்டவணை - 1. நூற்றொகை - 2,3, அகராதி -4,5.
இதழ்- 6,7. இலக்கியவரலாறு- 8-11.

A. அறிவியல் - 12-29
B. கணக்கியல் -30
C. இயற்பியல் -31
D. பொறியியல் - 32-45
G. உயிர் நூல் -46
H. புவியியல் - 47
I. தாவரவியல் - 48,49
J. வேளாண்மை - 50-55
K.kx. விலங்கியல் - 56-58
L. மருத்துவம் - 59 -114
ஜோதிடம் - 115 -152
Δ சித்தியல் - 153 - 170
N கலை - 171 -219
N கலை -இசை - 220 -226
O 31, 1A சங்கநூல் 227 - 244
O 31, IC 95 காப்பியம் -245 -248
O 15, 1 A கம்பன் -249 -255
O 31, 1K சிற்றிலக்கியம் - 256 -269
O 31, 1N கவிதை, கவிதை ஆராய்ச்சி - 270 - 386
O 31, 2N நாடகம் - 387 -399
O 31, 3:g புதினம் - சிறுகதை ஆராய்ச்சி 400, 660

# 1. நூல் அகர வரிசை

## a. பொது

### அட்டவணை

1. தமிழ்ச் சுவடிகள் அட்டவணை, நிர்மலாதேவி (இரா), பதி. உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், ரூ.6.00.

### நூற்றொகை

2. தமிழ்நாட்டு நூற்றொகை, தமிழ் - 1974, சுந்தர ராசன் (இ.மு), பதி, தமிழ் நாட்டு பொது நூலகத்துறை.
3. மொழிபெயர்ப்பு நூற்றொகை (Bibliography on Translations) சிவகாமி (ச), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ரூ. 35.00

### அகராதி

4. கைலாசம் அகராதி -தமிழ் - பிரெஞ்சு, கைலாசம், ஆதிலட்சுமி புத்தகசாலை.
5. மேலை இலக்கியச் சொல்லகராதி, சச்சிதானந்தன், மாக்மிலன் இந்தியா லிமிடேட், ரூ. 50.00

### இதழ்

6. உயராய்வு -1,, சஞ்சீவி (ந)பதி, தமிழ் இலக்கியத் துறை, சென்னைப் பல்கலைக் கழகம், ரூ 35.00.
7. தமிழாய்வு, தொகு-13, பால சுப்பிரமணியன் (சி) பதி. தமிழ் மொழித்துறை, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

## இலக்கிய வரலாறு

8. தமிழ் இலக்கியவரலாறு, பதி-4, அருள்சாமி(மு.சு), அமுதினிபதிப்பகம், ரூ. 15.00

9. தமிழ் இலக்கியவரலாறு, பதி-6, பாலசுப்பிரமணியன் (சி), நறுமலர்ச்சிபதிப்பகம், ரூ. 15.00.

10. மறைந்துபோன தமிழ்நூல்கள், பதி-3, வேங்கடசாமி, மயிலை, (சீனி) மணிவாசகர்பதிப்பகம் ரூ. 25.00.

11. ஸிந்தி இலக்கிய வரலாறு, அஜ்வானி (எல்.எச்) சாகித்திய அக்காதெமி, ரூ. 25.00.

## A - அறிவியல்

12. அரிய செய்திகள் 1001, ப்ருக் (கணியூர்) அணியகம், ரூ. 7.00.

13. அருளியலும் அறிவியலும், கணேசன் (பி.சி) வானதி ரூ. 5.00.

14. அறிவியல் அற்புதங்கள், சலாவுத்தீன், தஸ்த அசோகன் பதிப்பகம், ரூ. 4.50

15. அறிவியல் அற்புதங்கள், ராஜேந்திரன் (பி.எஸ்) சரசு பதிப்பகம், ரூ. 7.00

16. அறிவூட்டும் அறிவியல், சண்முகம் (ர) (செல்வநிலையம்) ரூ. 6.50.

17. அற்புதமான அறிவியல் குறிப்புக்கள், சௌந்தரராஜன் (டி.எம்) தமிழ்ச் சோலைப்பதிப்பகம், ரூ. 6.00.

18. அறிவியல் கண்டுபிடிப்புகள், சண்முகம் (ர), அறிவு நிலையம், ரூ. 14.00

19. அறிவியல் சிந்தனைகள், சண்முகம் (ர) சிறுவர் நூற்பதிப்புக் கழகம், ரூ. 15.00.

20. அறிவியல் செல்வம், கவியழகன், இலக்குமி நிலையம் ரூ. 7.25.

21. அறிவியல் புகட்டும் கதைகள், சண்முகம் (ர) அருணோதயம், ரூ. 7.00

22. அறிவியல் மலர்கள், கோவிந்த ராஜூ (இ) அருணோதயம், ரூ. 12.00.

23. கம்ப்யூட்டரின் கதை, சுஜாதா, அன்னம் (பி) லிட், ரூ. 12.00

24. நமது சக்தி, சிவசுப்பிரமணியம் (டி.வி) கல்விஉலகம்

25. பூமிக்கு வந்த வானமண்டல மனிதர்கள், ரவிச்சந்திரன் (வி) மாருதி பதிப்பகம் ரூ. 10.0C

26. மலைக்க வைக்கும் மனித ஆற்றல்கள், ரவிச்சந்திரன் (வி) மாருதி பதிப்பகம், ரூ. 8.00.

27. விஞ்ஞானமும் உயிர் வாழ்க்கையும், சண்முகம் (ர) செல்வ நிலையம்

28. விஞ்ஞானம் தரும் விந்தைச்செய்திகள், முத்துப் பிள்ளை அறிவு நிலையம், ரூ. 9.00

29. பொது அறிவுகளஞ்சியம், சாமி (என்.வி.கே) புத்தக பூங்கா, ரூ. 7.00

## B. கணக்கியல்

30. வான் மண்டலம், சிவசுப்பிரமணியம் (டி.வி) அதிசய உலகம், ரூ. 5.00

## C. இயற்பியல்

31. ஆக்கத்துறையில் அணுசக்தி, சௌந்திர ராஜன் (டி.எம்), ஹேமா பதிப்பகம் ரூ. 13.00

## D. பொறியியல்

32. ஆம்பிளிபையர் மெக்கானிசம், (பதி) அருணாசலம் நியூ செஞ்சரி புக் ஹவுஸ், பிரைவேட் லிமிடெட்

33. கடிகார மெக்கனிசம், சௌமியன், சங்கீதவாணி, ரூ. 6.00

34. கலர் டெலிவிஷன் டெக்னிக், அருணாசலம், (ஒம்ஸ்) ஒம்ஸ் பதிப்பகம், ரூ. 30.00

35. சினிமா ஆப்ரேட்டர் பயிற்சியும், புரொஜக்டர் மெக்கானிசமும், விஜயகுமார் (எம்), பாலாஜி பப்ளிகேஷன்ஸ் ரூ. 18.75

36. சைக்கிள் ரிப்பேர் செய்தல், பதி-2. சூசைராஜா (எல். ஏ) இலக்குமி நிலையம், ரூ. 4.50

37. சைக்கிளின் வரலாறு, பதி-2, சுப்பிரமணியம் (எல்), தமிழ்ச்சோலைப் பதிப்பகம், ரூ. 7.00

38. தென்கொரிய விமானம் பற்றிய திடுக்கிடும் உண்மைகள், நியூசெஞ்சிரிபுக்ஹவுஸ், ரூ.6.00

40. தொலைக்காட்சிக்கலை, நல்லதம்பி (வ) வள்ளுவன் வெளியிட்டகம், திருவான்மியூர், ரூ. 22.00

41. டெலிவிஷன் பழுதுபார்ப்பது எப்படி? சேஷய்யா (ஏ.கே) ஸ்ரீலஷ்மி பிரசுரம், ரூ.10-00

42. மின்சார விபத்தை தடுப்பது எப்படி? சுந்தரசீனிவாசன் (என்), பாலாஜி பப்ளிகேஷன்ஸ், சென்னை, ரூ. 4.75

43. மேட்டரின் வரலாறு, பதி-2, சுப்பிரமணியம் (எல்) தமிழ்ச் சோலைப்பதிப்பகம் ரூ. 4.25

44. ரெஹப்ரிஜிரேஷன் ஏர்கண்டிஷனர், பால் (டி. என். ஜி) பைலட் பப்ளி கேஷன்ஸ், ரூ. 12.00

45. ஸ்டிரியோ, ஆம்ப்ளியர் மெக்கானிசம், பால் (டி.என்.ஜி) பைலட் பப்ளிகேஷன்ஸ், ரூ. 14.00

## G. உயிர்நூல்

46. கடல் வாழ் உயிரினங்கள், பதி-4, மணிமொழி மகரந்தம், ரூ. 4.00

## H. புவியியல்

47. பல்வகை உலோகங்கள், துமிலன், செந்தூரான், ரூ. 7.00

## I. தாவரவியல்

48. அதிசய தாவரங்கள், பதி - 3., சங்கரராமன். (எஸ்), பூங்கொடி பதிப்பகம், சென்னை ரூ. 1.50

49. மரங்கள் வளர்ப்போம், சௌந்தரராஜன் (டி.எம்), ஆரியகவுடர் ரோடு, வசந்தா பிரசுரம், ரூ. 15.00

## J. வேளாண்மை

50. காய்கறிச்சாகுபடி, முத்துக் கிருஷ்ணன் (கோ.ரா) சுந்தரராஜன், நியூசெஞ்சுரி, ரூ. 15.00

51. தென்னைச் செல்வம், பனைச் செல்வம், நல்லத்தம்பி, வெற்றி பதிப்பகம், ரூ. 6.00

52. நம் நாட்டுக் கீரைகள், பாலசுப்பிரமணியன், (கே), கருப்புஞானி (கே), நியூசெஞ்சுரி. ரூ. 8.00

53. பண்ணைப்பராமரிப்பும் மேலாண்மையும், ஆனந்த பத்மநாபப்பிள்ளை. ரா, ரா. ஆனந்த பத்ம நாபப்பிள்ளை, நடுத்தெரு, ரூ. 30.00

54. பழங்களின் மருத்துவப்பயன்கள், பதி-3. ஜனார்த் தனன் (என்) நர்மதா, ரூ. 6.00

55. வீட்டில் காய்கறித்தோட்டம் போடுவது எப்படி? பதி-2, இராமசுப்பிரமணியன், மணிமேகலைப் பிரசுரம், ரூ. 25.00

## K.kx. விலங்கியல்

56. அதிசயப்பிராணிகள், பதி-2, ராகவன் (என்). அசோகன் பதிப்பகம், ரூ 7.50

57. கோழிவளர்ப்பு, சண்முகம் (ர), புத்தகப்பூங்கா. ரூ. 11.00

58. பால்பண்ணைப் பராமரிப்பு, பலராமன் (நா). என்னெஸ் பப்ளிகேஷன்ஸ்.

## L. மருத்துவம்

59. அளவோடு பெற்று வளமோடு வாழும் வரை, வெங்கட்ராவ், (கே) ஸ்டார் ரூ. 6.00

60. ஆண் -பெண்- கர்ப்பத் தடைமுறைகள், தமிழ் வாணன், புன்னை, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 5.50

61. இஞ்சி -எலுமிச்சை-தேன் எளியவைத்தியம் - பதி-5. நடராசன் (திருமலை) தமிழ்ச் செல்வி நிலையம், ரூ. 4.00

62. இஞ்சி மஞ்சளிலே மருத்துவம், சம்பந்தம், வானதி பதிப்பகம், ரூ. 3.50

63. இயற்கை மருத்துவ தத்துவங்கள், அருணா, சர்வோதய இலக்கிய பண்ணை, ரூ, 5.50

64. உங்கள் உடலைப் பற்றி 1000 உண்மைகள், பெருமாள்சாமி (ஆர்) புகழ் பப்ளிகேஷன்ஸ், ரூ. 27.50

65. உணவில் புலால் தேவையா? கருப்பையா, திருமகள், ரூ. 8.00

66. உடல் நலம் கெடாமல் வாழ்வது எப்படி? முத்தையா (பி.எல்) ஸ்டார், ரூ. 3.00

67. உடல் பருமனைக் குறைக்க சுலபமான வழிகள், பதி-2, இராம சுப்பிரமணியன், மணிமேகலை பிரசுரம்.

68. 200 எளிய வைத்தியமுறைகள், பதி-4, சொர்ணம் சோலை, தொகு. இலக்குமி நிலையம் ரூ. 30.00

69. ஒல்லியாக இருக்கும் நீங்கள் குண்டாக விரும்பு கிறீர்களா. பதி-4, இராம சுப்பிரமணியம், மணிமேகலைப் பிரசுரம், ரூ. 3.25

70. கண்ணாடியின்றிச் சிறந்த கண்பார்வை பெறுங்கள், பதி-2, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 6.00

71. கண்ணாடியின்றிச் சிறந்த கண்பார்வை பெறுங்கள். பதி-3, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 6.00

72. கீரைகளின் மருத்துவ குணங்கள், முத்து விஜயபாஸ்கர், அனுராகம், ரூ. 5.00

73. குடும்பக் கட்டுப்பாடு, ஓர் ஆராய்ச்சி, சுந்தரம் (எம்) ஸ்டார் பிரசுரம், ரூ. 9.00

74. குழந்தை இல்லாத குறையா? மணிமேகலை பிரசுர ஆசிரியர் குழு, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 5.90

75. குழந்தை வேண்டும், பதி-2, ஜனக்குமாரி (டி.எஸ்), ஸ்டார், ரூ. 5.00

76. சத்துள்ள உணவுகள் உண்டு ஆரோக்கியமாய் வாழ்வது எப்படி? பதி-2, ராஜா (எஸ்.ஏ) தமிழ்ச் சோலைப் பதிப்பகம், ரூ. 5.00

77. சக்கரரை நோயுடன் சகஜவாழ்வு, கணபதி (சகு) பாரி நிலையம்.

78. சித்தர்கள் கண்ட சிறந்த மருந்துகள் - பதி-3, நடராசன், திருமலை, யமுனாபிரசுரம், ரூ. 4.75

79. சித்தர்முறை கிழங்கு வைத்தியம், நீலவன், யமுனா, ரூ. 4.50

80. சித்தர் முறை பால் வைத்தியம், நீலவன், யமுனா, ரூ. 4.50

81. சித்தர் மருத்துவ வழிகாட்டி, பாகம் I நோய் இயல் வேங்கடேசன் (கி) ஸ்ரீசக்தி பதிப்பகம், ரூ. 35.00

82. சீரகத்தின் சிறப்பு மருந்துவம், நடராசன் (திருமலை, சங்கீத வாணி, ரூ. 5.90

83. சுற்றுப்புறச் சுகாதாரம், ராஜேந்திரன் (பி.எல்) பூங்கொடி பதிப்பகம் ரூ. 6.00

84. சுற்றுப்புறமும் சுகாதாரமும், சௌந்திரராஜன் (டி.எம்), தமிழரசி பதிப்பகம், ரூ. 6.00.

85. சுவையான கனிகளிலே மருத்துவம், சம்பந்தம், வானதி ரு. 6.00

86. தாய்ப்பால், மாலதி (என்.ஜி) பூரம் பப்ளிகேஷன்ஸ் ரூ. 5.50

87. தோல் தொல்லைகள் பதி-2. இராம சுப்பிரமணியன், மணிமேகலை பிரசுரம் ரூ. 4.00

88. நீங்கள் உயரமாக வளர வேண்டுமா? பதி-4. இராம சுப்பிரமணியன், மணிமேகலை பிரசுரம், ரூ.3.25

89. நோய் அறிதல் நடராஜன் (கே) அபிராமி, ரூ. 27.00

90. நோய் தீர்க்கும் காய்கறிகள், சூசைராஜா(எஸ்.ஏ) அறிவுநிலையம், ரூ. 2.50

91. நோய் சீர்க்கும் கீரைகள், சூசைராஜா (எஸ்.ஏ) அறிவு நிலையம்.

92. நோய் தீர்க்கும் பழங்கள் சூசைராஜா, அறிவு நிலையம், ரூ. 10.00

93. நோய் தீர்க்கும் மூலிகைகள். பதி-2, சூசைராஜா, அறிவு நிலையம், ரூ. 10.00

94. பப்பாளிமரம், பதி-3, சூசைராஜா (எஸ்.ஏ) ஸ்டார் பிரசுரம். ரு. 3.00

95. பல் ஈறு நோய்கள் - தடுப்புமுறைகளும் பாதுகாப்பும் இராஜன் (பி.பி.), புஷ்பராஜன (பி) நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்.

96. பயன் மிகு கீரை மருத்துவம், நீலவன், யமுனா பிரசுரம், ரூ. 5.00

97. பயன் மிகு பச்சிலை மருந்துவம், நீலவன், யமுனா பிரசுரம், ரூ. 5.50

98. பிளட் பிரஷர், பதி-2, தமிழ்வாணன், புனை, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 12.00

99. பிள்ளைகள் பிறக்காமலிருக்கச்சிலவழிகள், பதி, தமிழ் வாணன். புனை., மணிமேகலைப்பிரசுரம். ரூ. 5.50

100 புதுமுறை குழந்தை வைத்தியம்- இராசகோபாலன் (பெ.மு) ஸ்ரீ.லஷ்மி பிரசுரம். ரூ. 10.00

101. பூக்களின் மருத்துவக் குணங்கள் பதி-2, ஸ்ரீ நிவாசன் ராமலிங்கம், நர்மதா பதிப்பகம், ரூ. 6.00

102. மகளிர் நலம்: கருத்தடை முறைகள் 30. பதி -2, ஜனார்த்தனன் (என்) நர்மதா பதிப்பகம், ரூ. 9.00

103. மார்பகப்பிரச்சினைகள், மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 6.00

104. முதலுதவி, டி.எம்.என். தமிழரசி, ரூ. 6.00

105. வர்மத் தீர்ப்பு, சிதம்பர தாணுப்பிள்ளை (எஸ்) சித்த மருத்துவ நூல் ஆராய்ச்சி நிலையம், ரூ. 15.00

106. வயிற்றுக் கோளாறுகள், பதி-8, இராமசுப்பிரமணியன், மணிமேகலைப் பிரசுரம், ரூ. 29.00

107. விஞ்ஞான நோக்கில் நோய் நீக்கும் மூலிகைகள், சதாசிவம் (சுப) நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் ரூ. 10.00

108. விஞ்ஞானமும் மனித உடலும், முத்துப்பிள்ளை (சி) அறிவு நிலையம்.

109. வீட்டுக்கு உதவும் நாட்டு மருத்துவம், பதி-3, இரத்தின சண்முகனார், அறிவு நிலையம், ரூ. 25.00

110. வீட்டு சுகாதாரம், பதி-2, சூசை ராஜா (எஸ்.ஏ) ஸ்டார், ரூ.'5.00

111. வெங்காயம் வெள்ளைப் பூண்டு மருத்துவம், சம்பந்தம், வானதி, ரூ. 4.50

112. வெந்தயத்தின் சிறப்பு மருத்துவம், நடராசன் (திருமலை) சங்கீதவாணி, ரூ. 4.75

113. வைத்தியக் களஞ்சியம், செல்வப் பிரியா, சங்கீதவாணி, ரூ. 7.50

114. ஹார்ட் அட்டாக் பதி-2, தமிழ்வாணன், புனை, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 9.00

# ஜோதிடம் (கணியம்)

115. அதிர்ஷ்ட எண்கள், தமிழ்வாணன். புனை,மணிமேகலைப் பிரசுரம், ரூ, 14.50

116. அதிர்ஷ்டதிசைகள் - கற்கள், வண்ணங்கள், ஜனார்த்-தனன் (எச்) நர்மதா, ரூ. 5.00

117. இன்பமாக வாழ்வது எப்படி? சச்சிதானந்தா, கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம், ரூ. 15.00

118. உங்கள் நட்சத்திரம், சரஸ்வதி (கே.என்) கடலங்குடி பப்ளிகேஷன்ஸ். ரூ. 9.00

119. உங்கள் ஜாதகப்படி அமையும் அதிர்ஷ்டங்களும், ராஜயோகங்களும், மணிமேகலைப் பிரசுரம் ஆசிரியர் குழு, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 11.50

120. உங்கள் ஜாதகப்படி ஆயுளும் ஆரோக்கியமும்/ மணிமேகலைப்பிரசுரம் ஆசிரியர்குழு, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 11.00

121. உங்கள் ஜாதகப்படி உங்கள் குடும்பம், மணிமே கலைப் பிரசுர ஆசிரியர்குழு, மணிமேகலைப் பிரசுரம், ரூ.8.50

122. உங்கள் ஜாதகப்படி என்ன தொழில் செய்யலாம் பதி-2, மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு ரூ. 5.50

123. உங்கள் ஜாதகப்படி செல்வமும் வாழ்க்கை வசதி களும், மணிமேகலைப் பிரசுர ஆசிரியர்குழு, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 10.00

124. உங்கள் ஜாதகப்படி நிகழும் தசாபுக்தி பலன்கள், மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 25.00

125. எண்களும் எதிர்காலமும், புலியூர்க் கேசிகன், மாருதி பதிப்பகம், ரூ. 15.00

126. எண்களால் ஏற்றமிகு வாழ்வு, பாகம் - 3. துரை முருகன் (ஆர்.ஐ) ஆர். ஐ. முருகர். 1. சுந்தரேஸ்வரர் கோவில் தெரு, இராயப்பேட்டை ரூ. 19.00

127. எண் ஜோதிடமும் அதிர்ஷ்டமும், இலக்குமிநிலையம் ரூ. 9.00

128. ஏழரை நாட்டு சனியும், அஷ்டமத்து சனியும், மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு, மணிமேகலை பிரசுரம். ரூ. 9.75

129. குரு பார்வையும் குபேர வாழ்க்கையும், புலியூர்க் கேசிகன், மாருதி பதிப்பகம், ரூ. 4.00

130. கை ரேகையில் உங்கள் எதிர்காலம், நடராஜன் (எஸ்) அசோகன் பதிப்பகம், ரூ. 8.50

131. கோசர கிரகபலன்கள், பதி-3, சரஸ்வதி, (கே.என்) கடலங்குடிபப்ளிகேஷன்ஸ், ரூ. 9.00

132. சனிப்பெயர்ச்சி, மணிமேகலைப் பிரசுர ஆசிரியர்குழு, மணிமேகலைப் பிரசுரம், ரூ. 6.00

133. சார ஜோதிட விளக்கம், வைத்தியநாதன், ஸ்ரீபாதுகா பப்ளிகேஷன்ஸ், ரூ. 25.00

134. நவக்கிரகங்களும் 12 இலக்கின ராசிபுலன்களும், கோபாலகிருஷ்ணா, வசந்தவல்லி, ரூ. 7.00

135. பிறந்த நாள் ஜோதிட பலன்கள், முத்துவேங்கடாசலம் (மு) செல்வி பதிப்பகம், ரூ. 16.00

136. மங்கையர் அங்கங்களும் பலன்களும், கந்தகிரிதாசன். இலக்குமி நிலையம், ரூ. 6.50.

137. மச்சங்களும் அவற்றின் பலன்களும், பதி-2, மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு, மணிமேகலைப் பிரசுரம். ரூ. 5.90

138. மனையடி சாஸ்திரம் என்னும் வீடு கட்டும் சாஸ்திரம் -பதி-3 காமாக்ஷிதாசர், அபிராமி, ரூ. 5.00

139. மும் முடிவரம் ஸ்ரீ பாலயோகியர் தரிசனமும் யோக பலன்களும், சிவராமகிருஷ்ணன் (சி.கே)மாருதி பதிப்பகம், ரூ. 4.00

